THE HON. SRI M. BHAKTAVATSALAM : அமைச்சர்கள், அதிகாரிகள், வியாபாரிகள் வந்து தங்குவதால், அங்கு ஏற்படுத்த வேண்டுமென்பதல்ல. ட்ராவலர்ஸ் பங்களாவில் அதிகமான அளவுக்கு வியாபாரிகள் வந்தால், வசதி செய்ய வேண்டியதுதான். போதிய அளவுக்கு ஆட்கள் வராததால், நஷ்டம் ஏற்படுகிறது. நஷ்டம் இல்லையென்றால், பின்னால் அதைப்பற்றி யோசிக்கலாம்.

SRI V. V. RAMASWAMI : டெலிபோன் வசதி செய்து கொடுத்தால், அதை உபயோகிப்பவர்களிடமிருந்து கட்டணம் வாங்கிக் கொள்ளும்படி செய்யலாம். இந்த முறையில் ஒரு டெலிபோன் வைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : டெலிபோன் விதிகளின்படி ட்ராவலர்ஸ் பங்களாவில் வைக்கப்படும் டெலிபோனுக்குப் பணம் வசூலிப்பது முரணானது.

SRI V. V. RAMASWAMI : பொதுவாக நகர மன்றத்திற்கு இந்த மாதிரி அனுமதி கொடுக்க வேண்டுமென்ற ஒரு முடிவு இருக்கிறது. இனிமேல் இந்தக் கொள்கையை மாற்ற அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது சாதாரணமாக அனுசரிக்கப்பட்டு வருகிற கொள்கை இதுதான். அந்த மாதிரி ட்ராவலர்ஸ் பங்களாவுக்கு வைப்பது என்றால், பணம் மிச்சமிருந்தால் வைக்கலாம். நஷ்டம் ஏற்படுவதாக இருந்தால், டெலிபோன் வைப்பது அவசியமில்லையென்று கருதுகிறேன்.

SRI T. PURUSHOTHAM : Are there public telephones in other places for the benefit of merchants and others?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There are public telephones near the premises of Travellers' Bungalows. Perhaps they are not in the vicinity.

SRI MOHAMED RAZA KHAN : Suppose we go to Virudhunagar Travellers' Bungalow and we want to contact some important people from Virudhunagar; how can we do it if there is no telephone there?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There are other ways of contacting important men. (Laughter.)

### *Bicycles*

* 96 *Q.*—VIDWAN T. MUTHUKANNAPPAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of bicycles reported to have been stolen during the years 1956–57, 1957–58, 1958–59 and up to August 1959–60; and

(*b*) the number of bicycles recovered and the number of bicycles returned to the respective owners?

21st March 1960]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) 3,410.

(b) 1,726 and 1,682 respectively.

VIDWAN T. MUTHUKANNAPPAN : சொந்தக்காரர்கள் யார் என்று அறிய முடியாத நிலையில் இருக்கும் சைக்கிள்கள் என்ன செய்யப்படுகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சொந்தக்காரர்களைக் கண்டுபிடிக்கப் பிரயத்தனம் செய்யப்படுகிறது. கண்டுபிடிக்க முடியவில்லையென்றால், confiscate பண்ணுகிறோம்.

VIDWAN T. MUTHUKANNAPPAN : அத்தகைய சைக்கிள்களை ஏலம் விடுவதன் மூலம் எவ்வளவு வருமானம் கிடைத்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய விவரம் இப்போது என்னிடம் இல்லை.

VIDWAN T. MUTHUKANNAPPAN : களவு போன சைக்கிள்களைக் கண்டுபிடிக்க எந்தெந்த வழிவகைகளைக் கையாள்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போலீசார் கையாளுகின்ற வழிவகைகளைப்பற்றிய விவரங்கள் இப்போது என்னிடம் இல்லை. ஆனால், நல்ல வழிவகைகளைத்தான் கையாள்கிறார்கள்.

VIDWAN T. MUTHUKANNAPPAN : மாதந்தோறும் குறிப்பிட்ட நாளில் திடீரென்று சோதனை செய்தால், பல களவு போன சைக்கிள்களைக் கண்டுபிடிக்க முடியுமல்லவா ? அந்த முறையைக் கையாள்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : களவாடப்பட்ட சைக்கிள்களைத் தவிர, லைசென்ஸ் இல்லாமல் போகிறவர்களும் இருக்கிறார்கள். களவு போன சைக்கிள்களைக் கண்டுபிடிக்க என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க முடியுமோ அவைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

*Construction of overbridges*

* 99 Q.—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Government have received any grants from the Central Government for construction of overbridges and under-bridges at railway level crossings; and

(b) if so, the amount so received and how it is proposed to be utilised?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Does not arise.